14th December 1961]

The Prime Minister was addressed clarifying the stand of this Government that it should be made clear beyond all misunderstanding that there was no proposal whatsoever to abandon the use of any of the existing non-Devanagiri script, for any of the purposes for which they are at present used in different States.

*Fertilizer (distribution)*

* 2349 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் கைத் தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) பலநோக்கு கூட்டுறவு சங்கங்களின் மூலம் உர விநியோ கம் செய்யப்படுவதில்லை என்பது உண்மையா ?

(இ) அப்படியானல், காரணமென்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) No, Sir. Chemical fertilizers are being distributed through multi-purpose societies, marketing societies, agricultural banks, etc.

(இ) Does not arise.

SRI V. K. KOTHANDARAMAN : சமீபத்திலே நடந்த பஞ்சாயத்துத் தலைவர்கள் மகாநாட்டிலேகூட இதைப் பிரதான மாக கிளப்பியிருக்கிருர்கள். ஆகவே, அந்த நேரத்திலே கனம் முதல் அமைச்சர் அவர்கள்கூட இங்கே கேட்கப்பட்ட கேள்விகள் எல்லாம்கூட பரிசீலனை செய்து ஆவன செய்வோம் என்று சொன் ஞர்கள். ஆகவே, மீண்டும் பரிசீலனை செய்து அதைப்போல் விநி யோகம் செய்வதற்கு ஏற்பாடு செய்யப்படுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : சில புள்ளிவிவரங் களைக் கொடுத்தால், இன்றைக்கு இருக்கிற நிலைமை தெரியும். 1891 பிரைமரி சொஸைடிகளில் இப்போது உரம் விநியோகம் செய் கின்றூர்கள. அதில் 1,437 சொஸைடிகள பலநோக்கு கூட்டுறவு சொஸைடிகளாகும். நானூற்று எண்பத்தி நான்கு பாக்கி இருக் கிறது. அவைகள் மார்க்கட்டிங் சொசைடிகள், அக்ரிகல்சுரல் பாங்கு அண்டு ஸ்டோர்ஸ் ஆகும். ஆகவே, பெரியளவிலே கூட்டுறவு சொஸைடிகள் மூலமாகத்தான் நடக்கின்றது. சாதாரண மாக புகார் சொல்கிறவர்கள், ஒன்றிரண்டு கிராமங்களிலே இருக் கக்கூடியதைச் சொல்லக்கூடும். அதைத்தான் முதல் மந்திரி அவர் கள் பரிசீலனை செய்வதாகச் சொல்லி இருக்கிருர்கள்.

DEPUTY SPEAKER : Questions 2350 and 2353 are postponed.

*Waram cultivators (loans)*

* 2351 Q.—SRI S. M. ANNAMALAI : கனம் கைத் தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1961-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 29-ம் தேதியில் நட்சத்திரக் குறியிட்ட கேள்வி எண் 1904-க்கு அளித்த பதிலை யொட்டி வாரம் பயிரிடுபவர்களுக்கு பயிர்களின்மீது கடன் தரும் திட்டத்திற்காக 1961-62-ல் ஒதுக்கிய பணம் எவ்வளவு ?